உ

காமாக்ஷியம்மன் துணை.





மதுரை ஜில்லா கெண்டப்பநாயக்கனூர்
சமஸ்தான வித்வான்
நிமிஷகவி லேட் K. ரெங்கசாமி நாயுடு குமாரன்
நாடக ஆசிரியர்
R. கிருஷ்ணசாமி நாயுடு
அவர்களால் இயற்றிய

# ஸ்ரீ காமாக்ஷியம்மன் அவதாரச்சிறப்பு.

திருச்சினப்பள்ளி
ஸ்ரீராம் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.
1935.

அணா 0—2—0

உ

காமாக்ஷியம்மன் துணை.





மும்முடி தரித்த தெலுங்கு தெலுங்கு தேசாதிபதிகளான
யாகச் சத்திரியரென்னும் மராட்டயர் குலதெய்வமாகிய
ராஜாப்பட்டி

# ஸ்ரீகாமாக்ஷியம்மன் அவதாரச்சிறப்பு.

சித்துவார்பட்டி சு. கந்தசாமி செட்டியார்
ஷை யூர் ம. பெருமாள் செட்டியார்
மோர்ப்பட்டி ரே. சுப்பன் செட்டியார்
சீலிநாயக்கன்பட்டி பே. சுப்பன் செட்டியார்
ஷை யூர் ம. சின்னன் செட்டியார்
கப்ளாங்கரைசெட்டிபுதூர் ரா. ஸ்ரீரெங்கன்செட்டியார்
ஷை யூர் செட்டுமை சுப்பி செட்டியார்
மூசிரீ வே. சொக்கலிங்கம் செட்டியார்

இவர்களின் விருப்பத்தின்படி

திருச்சிராப்பள்ளி ஸ்ரீராம் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

உ
காமாக்ஷியம்மன் துணை.

விநாயகர் காப்பு வெண்பா.

முப்பழமும் சர்க்கரையும் மோதக பக்ஷணமருந்த
எப்பொழுதும் பிரியமுள்ள வென்குருவே—ராஜபுரி
சுந்தரியாம் காமாக்ஷி தேவி துதி பண்பாட
தந்தி முகக் கணபதி யின்றாழ் காப்பு

ஆசிரிய விருத்தம்

திருவளரும் கக்ஷி நகர் காமாக்ஷி யம்பிகா
திரிலோக மாதவும் நீ
தெலுங்கு தேசாதி குலதெய்வமாய் ராஜபுரி
தேடிவந்தமர்ந்த நீயே
அரவணிந்த பரமசிவன் அகமகிழும் பாரி நீ
அஷ்டலெக்ஷிமியும் நீயே
ஆதிபராசத்தி நீ அபிராமி சிவகாமி
ஆயி மகமாயி நீயே
சரவணனை யீன்ற நீ கௌரி கல்யாணி நீ
சாரூப சாயுக்ஷம் நீ
சதுர்யுகங்கண்ட மதுராபுரி ராணி நீ
தாயே மீனாக்ஷி நீயே
மருவிலா சீல நாயக்கனூரில் வாழ்ந்த
மராட்டியர் குலத்துதித்து
மகராஜாபுரி குடகு நதி யருகிலமர்ந்த நீ
மதியருள் காமாக்ஷி யுமையே

பாண்டிய னீன்ற மீனாக்ஷி என்ற மெட்டு.

பல்லவி.

காக்ஷிக டாக்ஷி காமாக்ஷி பணிந்தேன்
கார்த்தருள் ஆக்ஷி (கா)

அநுபல்லவி.

தாட்சியில்லாதர சாட்சி செய்குவாய்
தரணியை மாட்சி (கா)

## தோகையறா.

திருமுடி தரித்திட்ட தெலுங்கு தேசாதிபதி
தியானகுல தெய்வம் நீயே
அருபத்து நாலுமனே இருபத்துநாலுகுலம்
அனைவோர்க்களுக்கும் தாயே

## பல்லவி எடுப்பு.

நிதி மிகும் ராஜபுரி நேமி வந்துனைப்
பணிகுவார் வாமி
துதி செய்யும் ஆர். கிருஷ்ணசாமி செந்தமிழ்
அருள்வாய் சிவ காமி (கா)

## வெண்பா.

தெலுங்கு தேசாதிபதி யாகச்சத்ரிய குலம்
துலங்கவே நலந்தரும் காமாக்ஷி—தேவி துதி
செய்தருள் பெற்றிடவே ராஜபுரிக்கே வருவீர்
வையகத்திலனை வோரும் வாழ்க

## ஆசிரிய விருத்தம்.

சிரோங்கும் யுவ வருடம் சிறந்த ஆவணி மாதம்
தேதியும் பதினாரினில்
சித்திதரும் ஆதிவாரம் அஸ்த நக்ஷத்ரம்
திகழமிர்த யோகநாளில்
பாரோர்கள் போற்றவே ராஜபுரியில் வளர்
பராசக்தி காமாக்ஷியின்
பதிநல்ல ஆலயம் சுற்று திருமதில்களும்
பணிதிகளைப் புதுப்பித்ததால்
நேரான கும்பாபிஷேகமே செய்வதும்
நிறை மறுநாள் சோமவாரம்
நிக்ஷபம் அம்பிகை திருவிளா ஆரம்பம்
நிதிமன்னர் வருகுவீரே

## கூறுங்கள் கூறுங்கள் கூறுங்களே என்ற மெட்டு.

பல்லவி.

வாருங்கள் வாருங்கள் வாருங்களே கலி
தீருங்கள் தீருங்கள் தீருங்களே (வா)

அநுபல்லவி.

வாருடனே தெலுங்கு தேசாதிபதி யாவரும் (வா)

சரணம்.

வாருங்கள் தீதில்லா மராட்டயர் குலம்
மரபிலுதித்த யாகச்சத்ரியர்களே
கூறுங்கள் பக்தியுடன் றுதி நீங்களே
கோதை காமாக்ஷியருள் பெற்றுய்வீர்களே (வா)

வாசலங்காரி நமதம்பிகை வாழும்
வண்மை ராஜபுரிக்கே வந்து சூழும்
தேசத்துள்ள அனைவோரு மென்னளும்
தேவி மலரடி தெரிசனங்கேளும் (வா)

அம்பாள் வசித்திடும் ஆலயம் பாரும்
அஸ்வங்க ளிரண்டும் நிற்கின்ற ஜோரும்
நம்பிக் கார்த்தவராயன் றுதி கூறும்
நாம் செய்த சகல பாவங்கள் தீரும் (வா)

சீல நாயக்கனூர் வீரம்மாள் சன்னதி
சென்று தேவிதனைச் செய்து கொண்டோம் துதி
ஞாலம் புகழும் மதுரைவீரன் கதி
நற்றமிழ் ஆர். கிருஷ்ணசாமி சொன்ன நீதி (வா)

### ஆசிரிய விருத்தம்.

திருவிளம் ராஜபுரி தனிலெழுந்தருள் புரியும்
தேவி காமாக்ஷி பாதம்
தினம் மூன்று காலமும் அன்புடன் மறவாமல்
தியானமே செய்து மகிழ்வோர்
இருபத்திநாலு குலம் அருபத்திநாலு மனை
இத்தெலுங்கு தேசாதிபதிகள்
இனிய மராட்டயச் சத்ரியகுல தெய்வமிக்
குடகு நதியின் மேல்புரம்
வருகுவீர் அம்பிகையின் தெரிசனம் செய்யவே
வரிசையுடன் அனைவோர்களும்
வளர்கார்த்தவராயனையும் மதுரைவீர சுவாமியையும்
வணங்கியே வாழ்க மாதே.

## காக்ஷி கண் காக்ஷியே என்ற மெட்டு.

பல்லவி.

காக்ஷி கண் காக்ஷியே காமாக்ஷி தேவி திருக் (கா)

அநுபல்லவி.

மாக்ஷிமை மிகுந்திலங்கும்
ஆக்ஷியின் திருவிளாக் (கா)

சரணம்.

பங்கிபங்கியாக தேசாதிபதிகள் கூட்டமே
பாரிலிந்த உறன் முறையார்கள் கட்டு திட்டமே
விந்தையான அக்ரகாரம் வீதிகளேதேஷ்டமே
விகசித நவநிதி வியாபாரஸ்தர் நாட்டமே
வேண்டும் பலா தென்னைமா சிங்காரம் குடகு
நதிக்கரையானதின் மேல்புரம் தேவி
ஆண்டருள அமர்ந்ததே ஒப்பாரம் சொல்ல
ஆதிசேடனாலாமோ யின்னேரம்
பூஞ்சாமரத்தின் சீரும் புரவிகளின் ஜோரும்
காஞ்சியம்பாளைக்கோரும் கண்டாலே வினைதீரும் நல்ல (கா)
சென்னை இருபத்தி நான்கு ஜில்லாவிலுமுற்றவர்
சீராய் மும்முடி தரித்த தெலுங்கு தேசாதிபர்
நன்னயமுள்ள காருண்ய நற்குண மராட்டயர்
நானிலம் புகழ்குலமே தீர யாகச்சத்ரியர்
நாற்றிசையு முள்ளவர்கள் கூடி காமாக்ஷி
நம்குல தெய்வமெனவே நாடி தினம்
போற்றி பதினைந்து நாள் கொண்டாடி இந்தப்
புனித ராஜாபுரியைத் தேடி
வந்து வணங்கிடுவோர் வரப்ரசாதம் பெருவார்
மைந்தன் ஆர். கிருஷ்ணசாமி செந்தமிழைப்புகழ்வார் திருக் ()

ஆசிரிய விருத்தம்.

அம்பிகையே காமாக்ஷி தேவி நின் மைந்தர்கள்
யாகச் சத்ரியரனைவரும்
ஆசையுடன் உனது திருச்சன்னதிக்கே வந்து
அடிபணிந்தே வணங்கி
நம்பியே பக்தியுடன் கோடானு கோடிபேர்
நாற்றிசையுமே துதிக்க

நற்கதியழித்து நீ ஆசிர்வதித்து சுக
நல்லருள் புரிகுவாயே
அம்புவியில் மும்முடியோர் தெலுங்கு தேசாதிபதி
அஷ்டதிக்குள்ள பேர்கள்
அதிக நவநிதியுடன் புத்ர சந்தானமாய்
அனைவர்களும் வாழ்க மாதோ.

## ஞானபண்டிதமோதிலால் என்ற மெட்டு.

### பல்லவி.

கோவைக் கனிவாயம்பிகா ராஜபுரி வாழ்
தேவி காமாக்ஷியே நீ வா இது தருணமே (கோ)

### அநுபல்லவி.

பாவமணுகிடாமல்ப் பார்த்திடுவாய் கடைக்கண்
ஆவலுடன் பணிந்தேனே அருள்வாய் நீதனே (கோ)

### தொகையறா.

மும்முடி தரித்திட்ட தெலுங்கு தேசாதிபதி
முதல் யாகச்சத்ரியர்க்கே
செம்மையாய் மாரட்டபர் களுக்காகவே
சிறந்தகுல தெய்வம் நீயே

### பாட்டு.

தாமதமின்றி நானே தஞ்சமென்று வந்தேனே
தாயெனவே நம்பினேனே உந்தனைத்தானே (தா)

### தொகையறா.

இருபத்திநாலுகுலம் அறுபத்திநாலுமனைக்
கிதம்புரியும் தேவிநீயே
வருமுனது பக்தர்கட்கே மனமகிழ்ந்துநீ
வரங்கொடுத்தாளும் தாயே

### பாட்டு.

ஜென்மமீடேற்றுவாய் ஜெகமாய்கை மாற்றுவாய்
கன்மமகற்றுவாய் நீயே காப்பாற்றுவாயே (கன்)

### தொகையறா.

மல்லிகை முல்லையிரு வாக்ஷிசெண்பகம்
மருவுடன் பாரிஜாதம்
மலரடியிலர்ச்சனை செய்துஅனேவோர்தினம்
மகிழ்ந்தனைத்துதிப்பார் நீதம்

பாட்டு.

பார்மீதி லென்துயரம் தீர்ப்பதுவே யுன்பாரம்
ஆர். கிருஷ்ணசாமிக்கிந் நேரம் செய்யுபகாரம் (கோ)

## கதறுகுது என்ற மெட்டு.

பல்லவி.

கார்த்தருள்புரி கௌரி காமாக்ஷி (கா)

அநுபல்லவி.

பார்த்தாழ் சுந்தரி பரமேஸ்வரி
பர்வதன் குமாரி பார்புகழ் சிங்காரி (கா)

சரணம்.

சிங்கவாகனி மங்கள கல்யாணி
கங்கையான வேனி திங்கள் முகராணி
பொங்கும் பூராணி புவி காரணி
போற்றுவோரை நீகா ப்பாற்றுவாயம்மணி

முடுக்கு

பூவுலகோர் புகழ் மதுரையம்பதி
மேவியே திகழ் தேவியே நீகதி
காவியம் ஆர். கிருஷ்ணசாமியின் துதி
காட்சி மாட்சி கடாக்ஷி யித்தருதி (கா)

## காமாக்ஷியம்மன் அவதாரச் சிறப்பு.

நொண்டிச்சிந்து.

ஆதிகதை அதிசயமே ராஜபுரி
அம்பிகை காமாக்ஷி தேவி பூர்வீகமே
நிதிமிகும் சீலநாயக்கன் பட்டிதனில்
நிறைந்திடும் தெலுங்கு தேசாதிபதியாம்
யாகச் சத்திரியரென்ற வகுப்பினில்
யூக மராட்டயர் குலத்துதித்த
ஐந்துபேர் அண்ணன் தம்பிகள் ஒரு நாள்
யாவருமொன்று கூடி யோசனை செய்து
ரத்தின வியாபாரம் செய்யவே உத்தேசித்து
அத்தினமே புரப்பட்டார் பம்பாம் நகரம்
பச்சை மரகதம் சிவப்பு கோமேதகம்
மெச்சும் புஸ்பராகம் வைடூரியமும்
நீலம் மாணிக்கம் பவளம் நவரத்தினம்
நிறப்பவே வாங்கிக்கொண்டு திரும்பி வந்து

பெண்டு பிள்ளைகளைக்கூட்டி சுமையெடுக்கப்
பொதியாடு ஆளுக்கொன்றாகவோட்டி
தஞ்சை திருச்சி ஸ்ரீரெங்கம் நல்ல திரு
வானைக்காவலுடனே சமயபுரமும்
வேகமாகச் சென்று ஊர்களில் வார்த்தைமிக
யூகமாகப் பேசி வியாபாரமே செய்து
அங்கிருந்து மேற்கு திசையில் செல்வோமென்று
அவர் பெண் குழந்தை ஒன்றை மாட்டின் மீதேற்றி
சென்றார்களாம் வழி கூடி பொதி மாடு
ஒன்று இனம்பிரிந்து வேகமாயோடி
மாயமாகவே மறைந்திட அந்த
மாட்டின் மீதேயிருந்த பெண் குழந்தையும்
காளையை வேகமாய் நடத்தி மனம் போல்
மலைவனம் ஆறு ஊருகளைக் கடந்து
தாண்தோன்றி மலை கடந்து தேவர்மலை
தானடுத்துத் தீர்த்தமாடிப் பூசை முடித்து
சென்றதொம் காளை மீதேறி மதலையைப்
பயின்ற அன்னைதந்தை யிரைந்து பேர்களும்
தண்ணீர் காட்ட மாட்டை நிறுத்தி சரிபார்க்கத்
சானே ஒரு வெள்ளை மாட்டைக்காணோமே யென்று
பொதியுடன் பெண் குழந்தையும் காளைமீது
போனதேயென் செய்வோமென்று புலம்புகின்றார்

கட்டபொம்மு பாடல் மெட்டு.

புலம்பல்.

ஐயையோ தெய்வமே என்ன செய்வோம்
என்ன செய்வோம் விபரம்
அரியாத குழந்தை போனமாயம்
அரியாத சின்னும் சிறு குழந்தை
சிறு குழந்தை இன்னும்
சரியாக ஐந்து பிராயமில்லை
மாடெங்கு தான் கொண்டு போனதையோ
போனதையோ இந்தக்
காடெங்குந் தேடி யலைகின்றோமே
அந்தர தேவதை துர்க்கையரே
துர்க்கையரே நீங்கள்
ஆதரிக்கலாகாதோ யிந்த வேளை

குழந்தை யிருக்குமிடம் சொல்வீர்களே
சொல்வீர்களே இதோ
கோடி நமஸ்காரம் உங்களுக்கே

என்று புலம்பியே ஐந்துபேரும்
ஐந்துபேரும் அங்கே எதிராக
வந்தவர்களைக் கண்டு

ஐயா அண்ணர்களே தம்பியுங்கள்
தம்பியுங்கள் கண் முன்னாலே
பொதி மாடு போனதுண்டா

சின்னும் சிறு பெண் குழந்தையுடன் குழந்தையுடன்
பொதி சுமந்து சென்ற மாட்டைக் கண்டீர்களா

ஐந்து பேருக்கும் ஒரு பெண் குழந்தைபெண் குழந்தை நாங்கள்
அகலவிட்டுமே புலம்புகின்றோம்

கண்டதுண்டோ இப்போ சொல்வீரையா சொல்வீரையா
இதோ கையெடுத்துங்களை கும்பிடுவோம்

பார்த்ததுண்டா நீங்கள் சொல்வீர்களே சொல்வீர்களே உங்கள்
பாதம் பணிந்து நாம் போற்றி செய்வோம்

என்று அழுது புலம்பும் போது புலம்பும்போது எதிர்
வந்த வழிப்போக்கர் சொல்லலுற்றார்

விருத்தம்.

கண்டோமே காத வழிக்கப்புரத்தில்
கானகமே தான்தோன்றி மலைக்கப்பாலே

பெண் குழந்தை பொதிமாடு விட்டிரங்கி
பேர்பெற்ற தேவர் மலைத் தீர்த்தமாடி

நன்னயமாய் பூசை ஜெபம் முடித்துப் பின்னும்
நடந்ததப்பா ஆச்சரியம் காலை மீதே

பின்னமில்லை பின் துடர்ந்தால் சீக்கிரத்தில்
பெண் மதலையை நீங்கள் காணலாமோ

கட்டப் பொம்மு மெட்டு முடுக்கு

இந்தவிதமாக சொல்லக் கேட்டு அவர்
சென்றார்கள் சீக்கிரமாகவே தான்

வாருங்கள் அண்ணரே தம்பிகளே நீங்கள்
பாருங்கள் மாட்டுத் தடமிதுவே

அந்தா தெரியுதே தான்தோன்றிமலையும்
அதிக வேகமாய்ப் போவோமென்று

மாடுகளை வெகு வேகமாய் நடத்தி
மன்னவர்கள் வழி நேர்பிடித்து

தானவர் விரைவாய் ஓட்டம் நடையாகத்
தான்தோன்றிமாமலை போச் சேர்ந்தார்

தான்தோன்றி மலையில் நாலுபக்கம் தேடி
தையலைக் காணுமலே திகைத்து

அங்கு மனைவரும் தங்காமலே பினனும்
பொங்கும் தேவர்மலை நேர் பிடித்து

தேவர்மலை சென்று தீர்த்தக்கரைதன்னில்
தேடியும் காணுமல் நாற்றிசையும்

அம்மா குழந்தையே தாயேவென்றழைக்க
அக்கம் பக்கமெங்கும் சப்தமில்லை

சும்மா இங்கே சுற்றி யாவதில்லை யினி
சுருக்காகவே செல்ல வேண்டுமென்று

வாயு வேக மனோ வேகமதாகவே
வல்லவரைவர் நடக்கலுற்ருர்

மன்னவரைவரும் மராட்டயர் குல
மதலையைத் தேடி நடக்கலுற்ருர்

காடு காடாகவே தேடிடவே முன்னல்
மாடுமீதே சென்ற பெண் குழந்தை

கோங்கு புன்னை சரக்கொன்னை கூந்தற்பனை
கோலமிகும் தென்னை வாழையுடன்
நீர்வள நிலவளமும் சிறந்த ராஜ
நீதியும் தெய்வ நீதி தெரிந்த
பொங்கும் புகழ் ராஜாப்பட்டி யெல்லையினில்
மங்கை பொதிமாடு மீது சென்று
செல்வமிகும் ராஜாப்பட்டிக்குமே தெற்கு
நல்ல தீர்த்தமாம் குடகு நதி
குடகு நதிக்கரை மேல் புரமே சிறந்
தடர்ந்திருந்த பூஞ்சாமரமே
பூஞ்சாமரத்தடி மாட்டை விட்டிரங்கி
பொற்கொடி மதலை வீற்றிருக்க
தேடிச் சென்றவர்கள் பூஞ்சாமரத்தடி
தேசாதிபதிகள் வந்து நின்று
அம்மா அம்மாவென் றழைத்திடவே கேட்ட
அறியாத குழந்தையும் வாய் திறந்து
கூக்குரலிடாதீர் தந்தையரேயென்று

வாக்குப் பிறக்க மரத்தடியில்
அந்தச் சத்தங்கேட்டு ஐவர்களுமந்த
அடர்ந்த பூஞ்சாமரத்தைப் பார்க்க
கோடி சூரியன் போல் பெண் குழந்தையங்கே
கோதை பராசத்தி போல்த் தெரிய
ஆயிரம் பூரணச் சந்திரன் போலந்த
அரியாத பாலகி வீற்றிருக்க
கண்டவோரும் மனமகிழ்ந்து தாயே
கடுகி வருவா யென்றே யழைத்தார்
ஆனந்தக் கண்ணீர் பெருகிடவே யந்த
ஐவர் மனதும் உருகிடவே
எழுந்து வருவாய் நீ அம்மா அம்மாவென்று
இனிய வார்த்தை சொல்லி யழைத்தார்
அழைத்த அன்னை தந்தைகளைப் பார்த்து நல்
அரிவை புண் சிரிப்பாய் நகைத்து
செழிப்புடன் முக மகிழ்ச்சியாகவே
சேதி விபற முறைத்திடுமாம்



### நாலு மந்திரி ஓயிற் கும்மி மேட்டு.

என்னைப்பெற்ற அன்னை தந்தையரே நீங்கள்
ஏனோ அழுது புலம்புகின்றீர்
இன்னாள்வரையுமே உங்களுக்கு நானே
இன்பந்தரும் பிள்ளையாயிருந்தேன்
விதிப்பயனல்ல நீர்செய்த புண்ணியம்
வேடிக்கையாக வந்துபிறந்தேன்
இதுமுதல் நானுமுங்கள் யாரட்டயர்
இஷ்டகுல தெய்வமாயிருப்பேன்
ஆதிபராசத்தி அம்பிகை காமாக்ஷி
ஆயிரங்கண்ணுள்ள மாரிநானே
நீதிசெலுத்தவே பூலோகந்தன்னிலே
யாகச்சத்திரியருக்கே பிறந்தேன்
மும்முடிதரித்த தெலுங்குதேசாதிகள்
முன்னேயாகச் சத்திரியரென்னும்
நம்மினம்மாரட்டயர் குலத்தோரினி
நாடியென் சன்னதிக்கிங்கேவந்து

மொட்டையிட்டுக் காதுகுத்தும் குழந்தைக்கு
ரெட்டைக்கிடாய் சேவல் பொங்கலுடன்
கட்டுதிட்டந்தலைக் கட்டுடனே நீங்கள்
கண்ணியமுடனே ஒற்றுமையாய்
கொண்டாடி பக்தியுடனே கும்பிடுவீர்
கோடிகோடிகாலம் வாழச்செய்வேன்
எண்டிசையுள்ளதோர் மாரட்டயர் குலம்
இன்புற நாளும் விளங்கச்செய்வேன்
மாமதுரைவீரன் கார்த்தவராயனும்
மைந்தர்களென் சன்னதிக்கு வந்தார்
நேமமுடனேயென் ஆலயத்திற்கவர்
நிக்ஷயமாகவே காவல் செய்வார்
முன்னிற்கும் மதுரை வீரனேயும் கார்த்தவ
ராயனேயும் நீங்கள் கும்பிட்டாலே
என்னாளுமுங்களைப்பாது காத்து உங்கள்
இடஞ்சலைத்தீர்த்துக் காப்பாற்றிடுவார்
இந்த ராஜபுரி ஊருக்குத் தெற்காக
வந்த குடகு நதி யிதுவே
விந்தையுடனிந்த நதியில் மூழ்கினால்
எந்த பாவங்களும் தீர்ந்திடுமே
ஆல்போலத் தளைத்து அருகுபோல் வேரூன்றி
யாகச்சத்திரியரே வாழ்ந்திடுவீர்
கோல் மூங்கி போலவே முக்காலும் சத்தியும்
மும்முடி தரித்தோர் வாழ்ந்திடுவீர்
என்றன்னை தந்தையர்க் கம்பிகை காமாக்ஷி
இன்பமுடனே நல் வாக்கருள
இன்று எங்கள்குல தேவதை காமாக்ஷி
ஈசன் செயலிது யென்று எண்ணி
காஞ்சி காமாக்ஷியே அம்பிகையே தாயே
காப்பாற்றுவாயே நீ எங்களையும்
வாஞ்சையுடனே நீ இன்று முதலெங்கள்
வம்மிஷத்தை காப்பாய் மாதா நீயே
என்று வணங்கியே சென்றனராம் அங்கு
அன்று முதல் சத்தி நின்றதுவாம்
மன்றுள் நடமிடும் காமாக்ஷி யருளால்
மானிலத்தோர்களும் வாழி மாதோ

வெண்பா.

விந்தையுள்ள தென் மதுரைவீரன் பூர்வீகமே யான்
சந்தக்கவி ஆசிரியம் சாற்றிடவே சிந்தைதனில்
தோத்தரித்தேன் பூர்த்தி செய்வாய் தும்பிக்கையா கடைக்கண்
பூர்த்தருள்வாய் கணபதியுன் பதங் காப்பு

**மதுரைவீரன் துதி அவதாரச் சிறப்பு.**

**இருபத்திநாலு சீரடி ஆசிரிய விருத்தம்.**

நேசர்தினம் வாசமிரும் காசிவிஸ்வேசனை
நித்தியம் பூசை செய்தே
நினைப்பயின்ற செண்பகவல்லி துளசிராஜன்
நீ ஜெனித்த கணிதம் பார்த்தே
தோசமென ஜோதிடர் சொல்ல உனைவனத்திலிட
தோகை மாதிகப் பெண்கண்டு
துரிதமா யெடுத்துவந் துனை வளர்த்துவீர னென
தோதுடன் நாமம் சூட்டி
சுபமாக வாழ்கையில் காசிமன்னர்க்கஞ்சி
சுருச்காக வோரிரவினில்
சுந்தரக்கோனேரி நகர் கம்பள பொம்மணனிடம்
சொன்ன யேவல் பணிவிடை
கொஞ்சநாள் மாதிகன் சேவகம் செய்ய நல்
கோதை பொம்மியம்மாள்தனை
கூடநீ நினைவுற்று ருதுவான கன்னிவாழ்
குடிசைக் காவல் புரிந்தே
அஞ்சாமல் வஞ்சியிடம் அன்புடன்பேசிநீ
அவள்மனதை வசப்படுத்தி
ஐந்தாம்நாளிரவினில் அரிவையைச் சிறையெடுத்
தவனிபுகழ் திருச்சி சேர்ந்தே
அரசனும் விஜயரெங்க நாயகர் காவேரிநதி
அண்டியவருத வியாலே
அந்த பொம்மியைத்தேடி வந்தமன்னர் படைமாள
அமர் புரிந்து ஜெயித்த நாளில்
சகலபடை ராணுவம் தளமிகும் கிரீடனும்
தானே மன்னுதி மன்னன்
சதுர்யுகம் கண்டமதுராபுரி யரசனும்
தாஷ்டீக திருமலை நாயகன்

அகமகிழ்ந்துனைக் காண ஆசையாய் விஜயரெங்க
அரசர்க்கு லிகிதமெழுத
அதுகண்ட விஜயரெங்க அரசனும் மதுரைக்கே
அதிவிரைவிலுனை யனுப்ப
அத்தருணம் மீனாக்ஷி பட்டணம் சேர்ந்து நீ
அஞ்சாத கள்ளர் குலத்தை
அடக்கியதால் மாமதுரை வீரனெனப் பேர்பெற்று
அதிகாரம் செய்துவந்தாய்
சந்தோஷமாகவே திருமலை நாயகர்
தன்சேயனைப் போலுன்னை
சகல அதிகாரி நீ இளவரசன் நீயெனத்
தான்கார்த்து வரும் நாளையில்
மலையரசன் மகளாம் ஸ்ரீமீனாக்ஷி பணிவிடை
வழக்கமாய்ச் செய்துவந்த
மாதுநல் தேவரடியாம் வெள்ளையம்மாளை
மறைந்து சிறை நீ யெடுத்தாய்
காவலர் பிடித்துன்னை கைகாலை வாங்கவே
காக்ஷி மீனாக்ஷியருளால்
காவலாய் சன்னதியில் மாமதுரை வீரனெனக்
கார்த்திடும் துரையே போற்றி.

**கந்தா காருண்யனே என்ற மெட்டு.**

**பல்லவி.**

வந்தாள் தேன் பொழியும் மாமதுரைவீரனே
தந்தாள் நான்பணிந்தேனே வுன்பாதம்தீரனே (வந்)

**அநுபல்லவி.**

நேசமுடனே ராசநகரில் வாசமான ஐயனே
தாசர்கள் விசுவாசமாகவே பூசைபுரியும் மெய்யனே
தஞ்சம் தஞ்சமென்றே கெஞ்சியே துதித்தேனே
மிஞ்சும் சஞ்சலமே தீர்த்தருள் மதித்தேனே

**தொகையறா.**

கொஞ்சுமிழ ரஞ்சித வஞ்சி பொம்மியம்மாளை
கூடிச்சிறை எடுத்ததுரையே
அஞ்சிடாக் கம்பளத்தரசனுன் மாமன் படையை
அதமாக்கி வென்ற துரையே.

பாட்டு.

நல்லோர் தென்மதுரைக்கோன் திருமலைமகிழ்ந்திட
கள்ளர் பொய்களவு கொலை புன்மையொழிந்திட (வந்)

அநுபல்லவி எடுப்பு.

பணிசெய் கணிகை வெள்ளையம்மனைத்
துணிவுடன் சிறை யெடுத்தவா
பயந்து காவலர் கையிற்சிக்கியே
சொக்கர் ஆலயம் அடுத்தவா
காமாக்ஷி சன்னதி காவலாய் நடித்தவா
கவி ஆர் கிருஷ்ணசாமிக் கருள்கொடுக்கவா

கார்த்தவராயசுவாமி துதி.

அம்பிலிகை பாலனே என்ற ஓரடி மேட்டு.

கண்ணிகள்.

அம்பிகை காமாக்ஷி ஆலயத்திற்கே முன்
அதிகாரனே நீ கார்த்தவராயா
நம்பிடும் பக்தர்களுக்குள் தெரிசனம்
நாளுந் தந்தாளும் அன்பர்கள் நேயா (அம்)

தோகையறு.

பூரணச்சந்திரன் போன்ற ஆரியமாலையைப்
புகுந்து சிறையெடுத்த மாரா
காருண்யமாகவே தேவி திரு ஆலயம்
காவல் புரியும் ஒய்யாரா

பாட்டு.

புண்ய ராஜாபுரியைக் கண்யமாயாண்டருள்
புஜபலமான கெம்பீரா தீரா
பண்பாடும் ஆர். கிருஷ்ணசாமியின் செந்தமிழ்
பாதுகார்த்திடுவாயே சிங்காரா (அம்)

தேசாதிபதிகள் வசசஸ்தலங்கள்.

நொண்டிச்சிந்து மூடுக்கு.

அருமறையும் புகழம்பிகை காமாக்ஷி தேவிமைந்தர்கள்
அன்புள்ள தெலுங்கு தேசாதிபதிகள் வாழும் ஊரைக்கேளும்
சீர்மிகும் மதுரை ஜில்லாவாம் திண்டி மாநகர் தாலூகா
சிறந்த சித்துவார் பட்டியுமே அதற்கடுத்த மோருப்பட்டி
பஞ்சமில்லா அஞ்சுளிப்பட்டியுங்கேள் மதிமிகுந்த
பாலகர் வாழும் வேலுவார் கோட்டை ஞால கொல்லங்கோடு

தேசுள ராஜாப்பட்டியில் வாழ்வோரும் திருச்சி ஜில்லா
தேர்ந்த முசிரித் தாலூகாவும் நீர்வளமான கரூர்
உம்பர் புகழும் சம்பைக் கிணராகும் பரப்புத்துறையும்
உரியவர் வாளும் வரிக்காப்பட்டி உண்மை பேசுந் துறையூர்
சோலைமிருந்திடும் சீலிநாயக்கன்பட்டி இன்னமுங் கேளும்
வாலையருள் கோயம்புத்தூர பொள்ளாச்சி தாலூகா
கப்ளாங்கரையூர் கொத்தமங்கலத்தார் பலமாநகரம்
கனதனவான்கள் வாசமாகிய மணமுள வல்லங்கி
புகழும் நிகமம் குமிட்டிப் பதியுள்ளோர் குளிஞ்சாம்பாறை
குவலயமெங்கும் அநேக ஊர்கள் நவில சமயமில்லை
புவியிப்பதி மராட்டயருக்கே தேவி காமாக்ஷி
புண்ணியம் நற்கதி புத்ர சந்தானம் பூவில் கொடுக்கவாழி

எண்சீரடி ஆசிரிய விருத்தம்.

மணமிகும் சித்துவார் புரிதனில் வாழ்ந்திடும்
மகிபன் சுப்பன் செட்டியார்
மைந்தனுகும் கந்தசாமி பூமான் வெகு
மன்னர்புகழும் சிங்காரன்
குணமுள்ள மருதை செட்டியார்பெற்ற செல்வனும்
குவலயம் போற்றும் பெருமான்
கோதை காமாக்ஷி யவதாரமே யெடுத்த
கோலசீல நாயக்கனூர்
தனவானுகும் பெ. சுப்பன் செட்டியாரிந்தத்
தாரணியில் பேர்பெற்றவர்
தஞ்சமென்றோர்களைக் காத்திடும் காருண்ய
மற்ம சின்னுன் செட்டியார்
கனவான்களாமிவர் தெலுங்கு தேசாதிபதி
காரியஸ்தர்களாகும்
காமாக்ஷிதேவியருள் சேமமாகப் பெற்று
காசினியில் வாழ்கமாதோ.

---

பூமிபுகழ் கப்பளாங்கரைச் செட்டிபுதூரில்வாழ்
பூமான் ராமசாமி பெற்ற
புத்ரனும் ஸ்ரீரெங்கன் செட்டியாரின்னும் சில
புனிதர் பேரெடுத் துரைப்போம்
நேமனிப் புவிசெட்டுமை சுப்பிசெட்டியார்
நிதியும் மதியுள்ள யோகன்
நீர்வலம் நிலவளம் மாவனச் சோலைசூழ்
நிச்சயம் முசிரிவாழும்

வாமியருள் பெற்ற வெங்கிட ராமன் செட்டியார்
மகையுடனீன்ற பாலன்
வாகனுதிபனை சொக்கலிங்கம் செட்டியார்
வளரும் சிவநாம யோமன்
சேமமிகும் மோர்ப்பட்டி ரெகுராமன் செட்டியார்
சேயன் சுப்பன் செட்டியார்
சீர்தெலுங்கு தேசாதிபதி காரியஸ்தரிவர்
திசை மகிழ வாழ்கமாதோ.

---

பொருளுதவி புரிந்தவர்மீது வாழ்த்து.

ஆசிரிய விருத்தம்.

சந்தோஷமாகவே சித்துவார்புரியில் வளர்
சர்ஜனர்க்குகந்த நேசன்
சாத்மீகனுமிந்தப் புவியெங்குமே புகழ
சாஸ்திரங் கற்ற வாசன்
சந்ததி தெலுங்கு தேசாதிபதியான திட
யாகச்சத்ரிய கோமான்
சாரூப காமாக்ஷி தேவியை மறவாமல்
சதாகாலம் துதிக்கும் பூமான்
வந்த பலயேழைகளுக்கே நவ நிதிகளை
வாரிக் கொடுக்குந் தர்மன்
வாசமிகும் மராட்டயர் குலத்தலைமையே
வகுத்திட்ட ராஜயோகன்
இந்த நல் காமாக்ஷி தேவி துதி அச்சிலிட
இன்பமாய் பொருளுதவிய
சந்தமிகும் சுப்பையா செட்டியார் மைந்தன்
கந்தசாமி நீடூழி வாழ்க

---

திருமகளுரும் சித்துவார்புரியுல் வாழ்ந்திடும்
தெலுங்கு தேசாதிபதியாம்
திடமிகும் மராட்டயர் குலத்தோங்கிய
தீர யாகச்சத்ரியன்
தருமமிகும் குலத்தலைமை தான் பெற்ற மகிபனும்
சத்ய சற்குணவாசகன்
தயை யீவு தாக்ஷண்யக் கருணையுடனே பக்ஷாத்
தாப வைராக்ய நேசன்
பிரியமுள்ள குண மருதை செட்டியார் சேயன் புவி
புகழும் பெருமாள் செட்டியார்

பெருமையுள்ள ஜட்ஜிகள் கலெக்டர்கள் மதித்திடும்
பேர்பெற்ற சகட யோகன்
அருள்தேவி காமாக்ஷி அவதாரச் சிறப்பிதை
அச்சிலிடப் பொருள் கொடுத்தோன்
அஷ்ட லெக்ஷிமி சூழப் புத்ர சந்தானமுடன்
அவனியில் வாழ்க மாதோ

மங்களம்.

பல்லவி.

மங்களம் மங்களம் மங்களம் ஸ்ரீகாமாக்ஷிதேவி (மங்)

அநுபல்லவி.

மங்களம் சுபராணி மங்களம் கலைவாணி
கங்காதரணி க்யானி கௌரி கல்யாணியற்கே

சரணம்.

மணமிகும் ராஜபுரி மாதவுக்கும் மங்களம்
மதுரைவீரன் பொம்மி வெள்ளையம்மனுக்கும் மங்களம்
குணமிகுந்த கார்த்தவராயனுக்கு மங்களம்
கோதை சீலநாயக்கனூர் வீரம்மாளுக்கு மங்களம் (மங்)
தீரன் கணேசன் ஆறுமுகனுக்கும் மங்களம்
தெய்வானை வள்ளியம்மை யிருவருக்கும் மங்களம்
தேரும் தெலுங்கு தேசாதிகளுக்கும் மங்களம்
தென்மதுரை ஆர். கிருஷ்ணர் செந்தமிழுக்கும் மங்களம் (மங்)

கவி.

வாழ்க வாழ்கவே நான்மறை வாழ்கவே
வாழ்க ஸ்ரீராம் பிரஸ் என்றூலும் வாழ்கவே
வாழ்க சிறப்பிதை வாசித்தோர் வாழ்கவே
வாழ்க தெலுங்கு தேசாதிபர் வாழ்கவே



முற்றிற்று.



சுபம். சுபம். சுபம்.

# விளம்பரம்.

இப்புத்தகம் வியாபாரிகளுக்கு விலை சகாயமாய் கொடுக்கப்படும். இன்றுமுதல் 5 நாளைக்குப்பின் ஆர்டர்களை அங்கீகரிக்கப்படும். இப்புத்தகம் விற்பவர்களிடம் சகல விபரம் தெரிந்துகொள்ளலாம்.

மதுரை R. கிருஷ்ணசாமி நாயுடு,
நாடக ஆசிரியர்,
சுக்காம்பட்டி கஸ்பா, திண்டுக்கல் தாலூகா.